'சைவசித்தாந்த மகாசமாஜ மலேயா சிறப்பு மாநாட்டுச் சமயக் கட்டளை" என்ற பெயரிடுவது என்றும் இத்திட்டத்தை இவ்வாண்டு முகற்கொண்டு ஸ்ரீ மெய்கண்டார் திருநாளை ஒட்டி நிறைவேற்றுவது என்றும் தீர்மானிக்கப் பெற்றது.

2. காலஞ்சென்ற திரு. கா. இராமநாதன்செட்டியார் அவர்கள் விருப்பத்திற்கிணங்க அவர்கள் பணம் ரூ. 660- திரு. கொ. ம. சிங்காரவேலு அவர்கள் சமாஜத்திற்குச் செலுத்தினர். திரு. செட்டியார் அவர்கள் விருப்பப்படி இப்பணத்தை ஓர் ஆயிரமாகப் பெருக்கி மேற்குறித்தத் திட்டம் போல் ஆண்டு தோறும் ஓர் ஆங்கிலச் சொற் பொழிவிற்கு ஏற்பாடு செய்வது என்று தீர்மானிக்கப் பெற்றது. இக்கட்டளைக்குத் 'திரு. கா. இராமநாதன் செட்டியார் நினைவுக் கட்டளை' என்று பெயரிடுவது என்றும் தீர்மானிக்கப் பெற்றது.

—உதவிச் செயலாளர்.

## ஈழ நாட்டு அன்பர்களுக்கு அறிவிப்பு

ஈழ நாட்டு அன்பர்கள் பலர் சமாஜ உறுப்பினர் கட்டணத்தைப் பல ஆண்டுகளாக அனுப்பாமலே இருக்கின்றனர். இருப்பினும் சென்ற காலத்தின் திறனையும் வருங்காலத்தின் சிறப்பையும் குறித்து இதுகாறும் சித்தாந்த இதழ்களை அனுப்பி வந்துள்ளோம். அவர்கள் தங்களுக்குரிய சந்தாப் பாக்கியை உடனே விரைவிலனுப்பி வைக்க முயற்சி மேற்கொள்ள வேண்டுகின்றோம் எவ்வளவு பாக்கி முதலிய விவரங்களை அவரவர்களுக்கும் தனித் தனியாகக் குறித்து அனுப்பியிருக்கிறது. இனியும் பொறுமையை மேற்கொண்டால் சமாஜம் பொருள் இழப்புக்குள்ளாக நேரிடும் என்பதாலேயே இது எழுதத் துணிந்தோம். விரைவில் ஈழ நேயர்கள் தக்க பொறுப்பேற்று அரசாங்க அனுமதி முதலியன பெற்று சந்தாத் தொகையை அனுப்பி வைக்க ஆவன செய்ய வேண்டுகின்றோம். (துணைச் செயலாளர்)

நம் சமாஜ வயிர விழா மாதர் மாநாட்டுத் தலைவியார் திருமதி இராதா தியாகராசன் அவர்கள் ("மீனாட்சி நிலையம்", திருப்பரங்குன்றம் சாலை, மதுரை-3) சமாஜ ஆயுள் உறுப்பினராகச் சேர்ந்துள்ளார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றோம். (துணைச் செயலாளர்)

# "சமாஜ மணி விழா மலர்கள்"

பிப்ரவரி மாத இதழில் குறிப்பிட்டபடி சமாஜ மணி விழாவில் வெளியிட்ட ஏனைய இரு நூல்களைப் பற்றி குறிப்புக்களைக் கீழே தருகிறோம்.

1. திருவாசகம் ஆராய்ச்சிக் குறிப்புக்கள் (பக்கம் 180 விலை ரூ 2.) சித்தாந்தம் ஆசிரியர் இப்பத்திரிகையிலும் வேறு இடங்களிலும் எழுதிய 20 கட்டுரைகளின் தொகுப்பு; ஆராய்ச்சியாளருக்குப் பெரு விருந்தாய் இருக்கவல்லது. திருஎம்பாவை, பள்ளி எழுச்சி, பொற் சுண்ணம், ஆகிய கட்டுரைகள் யாவரும் படித்துச் சுவை யோடு அனுபவிக்கத் தக்கவை. பள்ளி எழுச்சியின் பொருள், கோகழி பற்றிய தெளிவு, அறுகு பற்றிய உரை, எச்சன்–ஆட்டுத் தேவர் பற்றிய விளக்கம் மிகவும் சிறப் பானவை. தலங்கள், பதிப்புக்கள் என்ற பகுதி மிகவும் பயன் படத் தக்கது. ஏடுகளால் பாடம் நன்கு செம்மை யுறும் என்பது நன்கு தெளிவாக்கப் பட்டுள்ளது, அகத்தி யர் திருவாசக திருவுள்ளக்கிடை அனுபந்தமாகச் சேர்க் கப் பட்டுள்ளது. இப் புத்தகம் திருவாசகம் பயில்வோ ருக்குப் பல இடங்களில் உதவ வல்ல அரிய துணைப் புத்தகம்.

2. தத்துவப் பிரகாசம்: 14ஆம் நூற்றாண்டின் பிற் பகுதியில் மெய்கண்ட பரம்பரையில் வந்த தத்துவப் பிரகாசர் செய்த விரிவான சாத்திர நூல். தத்துவப் பிரகா சம், பழைய உரையோடு, விரிவான ஆராய்ச்சி முன்னுரை அகராதிகளோடு, சித்தாந்த ஆசிரியரால் பதிப்பிக்கப் பட்டுள்ளது; பக்கம் 640. விலை ரூ, 8. இந்நூல் சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்று பாதங்களுக்கும் இன்றுள்ள பழமையான ஒரே தமிழ் மூல நூல், ஆசிரியர் இங்கு நூற்றெட்டு ஆசனங்கள் 108 பிராணாயாமங்களைக் கூறுகிறார். நூலின் முன்னுரை குறித்த காலப் பகுதிக் குரிய சிறப்பான விளக்கமாகும். இந்நூல் ஐம்பத்தாறு சமய பேதங்களைக் கூறி மறுக்கிறது. இதில் கூறப்பட் டுள்ள தசகாரியம் மிகவும் சிறப்பான விளக்கமாகும். சிவ பூஜை செய்வோருக்கு இது கிடைத்தற்கரிய ஒரே தமிழ் மூல நூல்.

இவ்விரு நூல்களையும் மு. அருணாசலமவர்கள் தம் சொந்தச் செலவில் வெளியிட்டுள்ளார்கள்,

# கட்டுரையாளருக்கு அறிவிப்பு

சித்தாந்தம் இதழுக்குக் கட்டுரை எழுத விரும்புவோர் அன்புகூர்ந்து கீழே குறிப்பிட்டவற்றைக் கவனிக்க வேண்டுகிறோம்.

1. சித்தாந்தம் சமயவளர்ச்சிக்கான கட்டுரையையே முதன்மையாய்க் கருதும். திருமுறை, சாத்திரம், தலங்கள் இவை பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகளும், சமயவளர்ச்சி நோக்கம் கொண்ட கட்டுரைகளும் அனுப்பலாம்.

2. கட்டுரைகளை நல்ல காகிதத்தில் ஓரம் விட்டு ஒரு பக்கத்தில் மட்டும் எழுதி அனுப்பவும். கட்டுரையைத் திரும்பப் பெற விரும்புவோர் விலாசம் எழுதித் தபால்தலை ஒட்டியுள்ள தபால் உறை உடன் வைத்திருந்தால் தான் இது சாத்தியம்.

3. முன்னமே வெளிவந்த கட்டுரை எதையும் அனுப்ப வேண்டாம்.

4. சித்தாந்தம் சமாஜத்தின் வெளியீடு ஆனமையால், அங்கத்தினர் கட்டுரையே வெளியிடப்படும். அங்கத்தின ரல்லாதவர் மூன்று ரூபா பணம் கட்டி அங்கத்தினர் ஆவது அவசியம்,

5. கட்டுரை ஆசிரியர் விலாசத்திற்கே அனுப்பவும்.

மு. அருணாசலம்
ஆசிரியர், சித்தாந்தம்
திருச்சிற்றம்பலம்
பந்தணைநல்லூர் வழி,
மாயூரம் தாலுகா.

## மதிப்புரை

இளையனூர் வேலூரில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ பாலசுப்பிரமணியப் பெருமான் திருப்பதிகம் என்னும் நூல் வரப்பெற்றோம். இதன் ஆசிரியர் வாலாசாபாத்து இந்துமத பாடசாலையில் அண்ணுவாயிலங்கும் திரு. நா. ப. தணிகையரசு அவர்கள் ஆவர். இந்நூலில் பதிகம் என்ற பெயருக்கேற்பப் பத்துப் பாக்களும் காப்புச் செய்யுள், வாழ்த்துச் செய்யுளும் ஆக 12 பாக்கள் அடங்கியுள்ளன. திருவாசகத்துக் கண்ட பத்து போன்று "இளையனூர் வேலூரில் கண்டேன் நானே" என்றே ஒவ்வொரு பாவிலும் இறுதியடி முடிகின்றது.

இச்செய்யுள்கள் ஆசிரியரின் நிறைந்த சித்தாந்த அறிவைப் புலப்படுத்துகின்றன. 36 தத்துவங்களையும் முருகப் பெருமானின் சிறப்பியல்புகளையும் நம் சைவ சித்தாந்த நுட்பக் கருத்துக்கள் பலவற்றையும் இந்நூல் சுருக்கிச் சொல்கிறது. ஆசிரியர் அவர்களே, இச்சமயக் கருத்துக்களைப் படிப்போர் தெரிந்து கொள்ளும் வண்ணம், பிற்சேர்க்கையாகக் குறிப்புரையும் எழுதியிருப்பது வரவேற்கத் தக்கது.

9—11—65 அன்று இந்நூல் இளையனூர் வேலூரில் வெளியிடப் பெற்றது. விலை குறிக்கப் பெறவில்லை. கிடைக்குமிடம் :—நா. ப. தணிகையரசு, வாலாஜாபாத் இந்துமத பாடசாலை, செங்கற்பட்டு மாவட்டம். (அம்பை)

குமரகுருபரன் பதினேழாவது ஆண்டு மலர்
ஆசிரியர் : T. M. குமரகுருபரன் பிள்ளை

கிடைக்குமிடம் – குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் : (நெல்லை மாவட்டம்) ஆண்டு சந்தா ரூ. 2–25.

குமரகுருபரன் பதினேழாவது ஆண்டு மலர் வரப் பெற்றோம். இம்மலரில் 20 கட்டுரைகள் இலங்குகின்றன. அவற்றில் 5 ஆங்கிலக் கட்டுரைகளும் அடங்கியன. நம் சமயக் கொள்கைகளைப் பரப்புதலையே நோக்கமாகக் கொண்டு இவ்விதழ் நல்ல தொண்டு செய்து வருவது யாவரும் அறிந்த தொன்றாகும். இதிலுள்ள கட்டுரைகள் மிகவும் ஆராய்ச்சியையும், சமய விளக்கத்தையும், சாத்திர, தோத்திரக் கருத்து நுட்பங்களையும் கொண்டன. ஆதலின் சைவராய்ப் பிறந்த தமிழர்கள் யாவரும் படித்துப் பயன்பெற வேண்டும். எல்லோரும் படித்துப் பயனுற திருவருளை வழுத்துகின்றோம். அருள் நந்தியடிகளின் சமயப்பணி சிறக்க வாழ்க. —(அம்பை)

## திருமுருகன் திருவந்தாதி

ஆசிரியர் பிரமபுரம் மா. சோமசுந்தரனுர், நூல் கிடைக்குமிடம் : பார்த்தசாரதி, பொருளாளர், நகராட்சி அலுவலகம், வாலாஜாபேட்டை, வ. ஆ. மாவட்டம். விலை குறிக்கப் பெறவில்லை.

இந்நூல் இறைவணக்கப் பாடலுடன் 102 செய்யுட்களைக் கொண்டுள்ளது. சிறந்த ஓசைமிக்க கட்டளைக் கலித்துறைப் பாக்களைக் கொண்டு அந்தாதித் தொடையில் முருகன் பெருமைகளைச் சிறப்புறக் கூறுகின்றது. முருக வழிபாட்டு அன்பர்கள் படித்து உருகி இன்புற ஏதுவாய நூல்களுள் இதுவும் ஒன்றாக அமையும் தகுதியுடைத்து, சிறந்த நயமிக்கனவாகவும் பக்திப்பெருக்கை ஊட்ட வல்லனவாகவும் இப்பாக்கள் அமைந்திருப்பது போற்றத்தக்கதே. அன்பர்கள் படித்துப் பயன்பெறுவார்களாக. (அம்பை)

ஸ்ரீ காசி வழித்துணை விளக்கம். ஆக்கியோன்—சிவகளை மு. சுப்பையா, மயிலம் பொம்மபுர ஆதீன வெளியீடு. நூல் கிடைக்குமிடம்: மயிலம் மடம், தென்னார்க்காடு மாவட்டம்.

விலை ரூ. 1–50.

இந்நூல் மயிலம் பொம்மபுர ஆதீன 18 ஆம் பட்டம் ஸ்ரீமத் சிவஞான பாலயசுவாமிகள் காசி யாத்திரைக்குத் தம் அடியார் குழாங்களுடன் எழுந்தருளிய ஞான்று ஏற்பட்ட அனுபவங்களை நம் தமிழிலக்கியங்களுடன் அவ்வவ்விடங் களில் ஒப்புநோக்கித்துய்த்த திறனைத் தெரிவிப்பது. மேலும் காசியாத்திரை செல்ல விழைவோர் மேற்கொள்ளும் யாத்தி ரைக்குரிய வழிகளையும் விளக்கமாய்க் காட்டுவது. இதனை எழுதிய ஆசிரியர் இவ்விளக்கத்தை மிகச் சுவைபட எழுதி கடித மூலமாய்த் தெரிவிப்பதால் நம் தமிழ் மொழிக்குக் கடித இலக்கியம் குறைந்திருப்பதையும் நிறைவுபடுத்திய பெருமை யைப் பெற்றுள்ளார்.

இவ்வழித்துணை விளக்கத்தைப் படிப்போர் நம் சமயப் பல நுட்பங்களையும் தெரிந்து பக்திவலையில் தோய்ந்து பரவசப் பட்டு இறைவனின்னருளுக்குப் பாத்திரராம் நிலையையும் அடைவர். ஆகவே முத்திநிலைக்கும் இது வழித் துணை விளக்கமாய் அமைந்திருப்பது ஒரு சிறப்பாம்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் துறைமங்கலம் சிவப்பிரகாசர் பிரபந் தங்களில் மிக ஆழ்ந்து தோய்ந்தவர்கள். ஆகவே அங்கங்கு காணப்பெறும் எடுத்துக் காட்டுகள் அப்பிரபந்தப் பெருமை யையும் நமக்குத் தெள்ளிதின் விளக்கிக் காட்டுகின்றன. இது ஒரு ந லையாய நூல். யாவரும் இன்றியமையாது படித்து இன்புறத்தக்க தொன்று. வாங்கிப் படித்து நூல் நயத்தோடு இறைநலனும் வாய்க்கப்பெற்று இன்புறுவார்களாக.

(அம்பை)

## சைவ சித்தாந்த ஞான விளையாட்டு

ஆசிரியர் : கலாநிதி வ. பொன்னையா,

கிடைக்குமிடம் :— கலாநிதி, வ. பொன்னையா, கொக்குவில், இலங்கை. விலை 35 சதம்.

இது சைவ சித்தாந்தம் பற்றிய ஒரு கைநூல். இந் நூலாசிரியர் இலங்கை யோக சுவாமிகளின் மாணவராதலின் அவர்களிடத்துத் தாம் பெற்ற அறிவை உலகுக்குப் பயன் படுத்துகின்றார். சைவ சித்தாந்த நெறிக்குரிய முக்கிய கொள்கைகளைச் சில தலைப்புக்களாகக் கொண்டு வாழ்க்கைக்கு ஒத்து வரும் நிலையில் பகுத்து ஆசிரியப்பாவில் எளிய நடையில் இந் நூலினை ஆசிரியர் இயற்றியுள்ளார். இது அறிவுரை புகட்டுவது போல விளங்குகின்றது. ஆசிரியரின் முயற்சி மெச்சத் தக்கது. பலரும் படித்துப் பயன் பெறுக. —(அம்பை)

## இராமநாதப் பிள்ளை அறுபதாண்டு நிறைவு விழா :

சமாஜ அங்கத்தினரான கோவூர் க. இராமநாதப் பிள்ளையவர்களின் அறுபதாண்டு நிறைவு விழா, பச்சைப் பதிகம் என்ற சிறப்புடைய "போகமார்த்த பூண்முலையாள்" என்ற பாடல் பெற்ற திருநள்ளாற்றில் 24-2-66 அன்று மிகவும் சிறப்பாக நடைபெற்றது. பிள்ளையினுடைய வாழ்க்கை வரலாறு, இன்றைய நாளில் எல்லா மக்களுக்குமே தெய்வ நம்பிக்கையை ஊட்டவல்லது. அவர்கள் கல்யாணமாகிப் பல ஆண்டுகள் பிள்ளைப் பேறு இல்லாமல் இருந்து, பின்னர் ஒரு பெரியவருடைய உபதேசத்தால் திருக்கடையூர் அபிராமி அம்பிகையை உபாசித்து, அபிராமி அந்தாதியைப் பாராயணம் செய்யும் நியமம் மேற்கொண்டு, அம்பிகையருளால் புத்திரப் பேறு அடைந்தவர் ; அபிராமிகுமார் என்று பெயரிடப் பட்ட பையன் இப்பொழுது பி.ஏ., படித்து வருகிறான். அவர்களுடைய உபதேசத்தால், அதே நியமங்களை மேற்கொண்டு, அனேகர் வாழ்க்கையில் பெரு நன்மைகளைப் பெற்றிருக்கிறார்கள். பிள்ளையவர்களுக்கும் அவர்கள் குடும்பத்தாருக்கும் நமது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

விழா மலராக மு. அருணாசலமவர்களால் அபிராமி அந்தாதி வெளியிட்டுத் தரப்பட்டது. இது எல்லோரும் படிக்கத் தகுந்தபடி சொற்கள் சந்தி பிரித்து நிறுத்தல் குறியீடுகள் பெய்து, அழகுறச் செய்யப்பட்ட சிறு நூல்.

# அமரர் ராம. சொக்கலிங்கம் செட்டியார்

அண்மையில் திருவாளர் சொக்கலிங்கம் செட்டியார் இறைவன் திருவடி அடைந்தார் என்னும் செய்தி கேட்டுச் சைவ அன்பர் பலர் மிக வருந்தமுற்றனர். சைவ உலகத்திற்கு மட்டுமன்றி அரசியல் சமுதாய வட்டாரங்களில் நன்கு மதிக்கப்பெற்றவர். சென்னை சட்டசபையில் உறுப்பினராகவும் காரைக்குடி நகராட்சியில் தலைவராகவும் அவர் பணியாற்றிய காலத்தில் அவர் அளித்த உதவிகளைப் பலரும் போற்றியுள்ளார்கள். இங்குச் சிறப்பாக நாம் கவனிக்கத் தக்கது அவரது சிறந்த தெய்வபக்தியாகும் சைவசித்தாந்த மகாசமாஜத்திடம் நீண்ட காலமாகத் தொடர்பு கொண்டிருந்தார். பாரத சீன யுத்தத்தின போது நம் நாட்டின்பாது காப்பிற்காக சைவசித்தாந்த மகாசமாஜமும் உதவவேண்டும் என்னும் கொள்கையை மிக ஊக்கமாக ஆதரித்து, அவ்வகையில் சமாஜம் யுத்தநிதிக்குத் தொகை அளித்ததில் அவர் சிறப்பாகப் பங்குகொண்டார்.

இராமநாதபுரத்து மாவட்ட சைவ சித்தாந்தப் பிரசாரப் பிரதிநிதியாக சென்ற ஆண்டுவரையிலும் பணி புரிந்துவந்தனர். காரைக்குடி பகுதியில் பலர் சைவசித்தாந்த சமாஜத்திற்கு அங்கத்தினர்களாகச் சேர்ந்துகொள்ளுமாறு ஏற்பாடும் செய்தார் சென்னைக்கு வந்து பல நாட்கள் திருமயிலையில் தங்குவார். அதுசமயம் திருமயிலைக் கபாலீஸ்வரர் ஆலயத்தில் உரிய முறையில் தவறுது வழிபாடு செய்வார். ஒவ்வொரு வாரமும் திங்கட்கிழமைதோறும் நடைபெறும் வாரக்கூட்டு வழிபாட்டில் கலந்துகொள்வார். அவ்வழிபாட்டுச் சொற்பொழிவுகள் சில ஆற்றியுள்ளார். கடைசியாகக் கூட்டு வழிபாட்டு அன்பர்கள் எல்லோருடன் சேர்ந்து ஒரு புகைப் படம் தம் சொந்தச் செலவில் எடுக்க ஏற்பாடுசெய்து அதன் பிரதிகளைப் பல அன்பர்களுக்கு அளித்தனர். கபாலீஸ்வரர் ஆலயத்தோடன்றி சென்னையில் பல பகுதிகளிலும் கூட்டு வழிபாடு ஆரம்பிக்கப்பட வேண்டுமென்று அவர் விரும்பினர். ஆனல் உடல்நிலை காரணமாகத் தம் விருப்பத்தை நிறைவேற்ற அவர் முன்வர முடியவில்லை என்பதாகத் தெரிகிறது. திருமயிலைத் திருக்கோயிலில் கூட்டுவழிபாடு தீவிரமாக்கப் பட இப்போது ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது, அவரது நல்லெண்ணத்தின் திண்மையைக் குறிக்கிறது.

அவரது ஆன்மா சாந்தி யடைவதாக! இறைவன் திருவடி நிழலில் அது என்றும் இன்புற்றுத்திளைப்பதாக!! அப்பெரியாருடைய குடும்பத்தினருக்குச் சைவசமாஜம் தன் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறது. அவர்களுக்கு அப்பெருமான் என்றும் அருள் புரிவாராக.

**தலைவர் – சைவசித்தாந்த மகாசமாஜம்**

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜம்

## வைர விழா, சிதம்பரம்

# சைவ இளைஞர் சைவப் புலவர் மாநாட்டுத் தலைமை உரை

(2 — 1 — 66)

பெ. திருஞானசம்பந்தன், எம்.ஏ., எல்.டி.,
(வடமொழிப் பேராசிரியர், மாநிலக் கல்லூரி, சென்னை)

மெய்யன்பர்களே ! வணக்கம்.

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் மணிவிழாவின் அணியாய் நடைபெறும் சைவ இளைஞர் மாநாட்டில் கலந்து கொள்ளும் பேற்றினை அளித்த சமாஜத்தினருக்கு எனது உளங்கனிந்த நன்றியை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன். தவத்திரு ஞானியார் சுவாமிகளின் மாணுக்கராக இருந்த சைவ சீலரான எனது தந்தையின் தவப்பயனுகவே நான் உங்கள் முன்னிலையில் சில சொற்கள் கூறும் வாய்ப்பினைப் பெற்றிருப்பதாகக் கருதுகிறேன்.

சைவநெறி, இயல்பாகத் தோன்றி மெய்யறிவு பெற்ற பெருமக்கள் காட்டிய வழியில் நிலவுவது. அதைத் தோற்றுவித்த பெருமகன் இவன் என்று சுட்டப்படுவதில்லை. தோன்றிய இடமோ காலமோ வரையறுத்தற்கில்லை. நமது சமயம் வேதாகமங்களையும் தமிழ் சாத்திர

தோத்திர நூல்களையும் அடிப்படையாகக் கொள்வதோடமையாது அறிவாராய்ச்சியையும் அடிப்படையாகக் கொண்ட சிறப்பு வாய்ந்தது. அதன் தொன்மையையும் பெருமையையும் நம் நாட்டு நல்லறிஞர்களேயன்றிப் பிற நாட்டவரும் போற்றியிருத்தல்நோக்கத்தக்கது. சர் ஜான் மார்ஷல், புனிதர் கௌடீ முதலானோர் சைவமே இன்றும் நின்று நிலவும் சமயங்களில் மிகப் பழமையானது என்று கூறிச்சென்றனர். வேறெந்த இந்திய சமயத்தைக் காட்டிலும் உயிர்களிடத்து இறைவன் காட்டுகின்ற பெருங் கருணை சைவ சமயத்திலேதான் காணப்படுகிறது எனப் புனிதர் மக்னிகால் கூறியுள்ளார். இத்தகைய சைவம் மொஹஞ்சதரோ காலம் முதல் நம் நாட்டுப் பல்வேறு பகுதிகளிலும் சிற்சில மாறுதல்களுடன் வழங்கிவந்திருக்கிறது.

ருக் வேதத்தில் ருத்ரன் எனவும், யஜுர்வேதத்தில் பசுபதி, சர்வன், பவன், சம்பு, சங்கரன், சிவன் எனவும் நம் பெருமான் அழைக்கப்படுகிறான். அதர்வவேதத்தில் மகாதேவன், ஈசானன் என்றும் சுட்டப்படுகிறான். சுவேதாசுவதரோபநிடதம் ' இறைவன் அனைத்துயிரிடத்தும் தங்கியிருக்கின்றான்' எனவும், 'பாலிற்படு நெய் போல் உலகெங்கிலும் நீக்கமற நிறைந்திருக்கும் அவனை அறிந்தால் எல்லாப் பாசங்களினின்றும் விடுபடுவோம்' என்றும் கூறுகிறது. 'க்ருதாத் பரம் மண்டமிவாதி சூக்ஷ்மம் ஞாத்வா சிவம் சர்வபூதேஷு கூடம், விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் தேவம் முச்யதே சர்வபாசை:' (4-16).

மகா பாரதத்தில் அர்ஜுனன் துர்க்கையையும் சிவனையும் வழிபடுவதான வரலாற்றையும், பாசுபத சைவத்தைப் பற்றிய குறிப்பையும் காண்கிறோம். கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த பதஞ்சலி முனிவர்

'சிவபாகவதர்' என்றழைக்கப்படும் பக்தர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார். மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த குஷான மன்னனான வேமா காட்பைசஸ் தன்னை மாஹேசுவரன் என்று கூறிக்கொள்வதில் பெருமை அடைகிறான். அவன் வெளியிட்டுள்ள நாணயங்களில் நந்தி உருவமும் திரிசூலம் தாங்கிய சிவனுருவமும் பொறிக்கப்பட்டிருக்கின்றன. ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்த வராஹமிஹிரர் திருநீறணிந்த அந்தணர்கள் விக்ரஹப் ப்ரதிஷ்டை செய்யத்தக்கவர்கள் என்று குறிப்பிடுகிறார். ஏழாம் நூற்றாண்டில் ஹர்ஷவர்த்தனர் காலத்தில் வாழ்ந்த ஹ்யூன் சாங் என்ற சீனயாத்திரிகரும், பாணபட்டன் என்ற வடமொழிப்புலவரும் பாசுபதர்களைப் பற்றிப் பலவிடங்களில் எழுதியிருக்கிறார்கள். காளிதாசன், பாரவி போன்ற கவிஞர்கள் சிவபரத்துவத்தைப் பலவிடங்களில் பரக்கக் கூறியிருக்கிறார்கள். மகாராஷ்டிரத்தில் உள்ள நாசிக்கில் கபாலேசுவரர் வழிபாட்டிற்கென ஒருகிராமம் மான்யமாக விடப்பட்டது ஏழாம் நூற்றாண்டு சாசனத்தில் குறிக்கப்பட்டுள்ளது. காஞ்சியில் ஏழாம் நூற்றாண்டில் அரசு செலுத்திய மகேந்திரவிக்கிரமவர்மன் என்ற பல்லவ வேந்தன், தான் இயற்றிய மத்தவிலாஸ பிரஹஸனம் என்ற நாடகத்தில் காபாலிகரைப் பற்றிக் குறிப்பிடுகிறான். ராஜசிம்மபல்லவன் சைவசித்தாந்தத்தில் தேர்ந்தவன் என்பது அவன் கட்டிய கோயிலில் உள்ள கல்வெட்டின் வாயிலாக அறியக்கிடக்கிறது. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆதிசங்கரர் தமது பிரம்மசூத்திர பாஷ்யத்தில் சிவன் நிமித்த காரணன் என்ற கொள்கையுடைய சைவரைக் குறிப்பிடுகின்றார். காஷ்மீரத்தில் ஒன்பதாம் நூற்றாண்டு தொடங்கி ஆதிசங்கரர் செய்த அத்வைதப் பிரசாரத்தால் சைவத்தில் அத்வைத நிழல் படரத் தொடங்கிவிட்டது. தென்னாட்டிலும் சிலசைவ

வாதிகளிடையே இதை நாம் காணலாம். ஸ்ரீகண்டர், அப்பைய தீக்ஷிதர் போன்ருருடைய நூல்கள் இதற்குச் சான்று.விரிவஞ்சி இப்பட்டியலை நிறுத்திக்கொள்கிறேன். தொன்று தொட்டு நேபாளம் முதல் கன்யாகுமரி வரையில்—ஏன்—அதற்கும் அப்பால் ஈழத்திலும் சைவம் ஏதோ ஒரு வகையில் இருந்து வந்திருக்கிறது என்பது தேற்றம். ஏழாம் நூற்ருண்டு முதல் தமிழகத்தில் சமயாசாரியர்கள் ஆற்றிய அரும்பணியின் பயனுகை செம்மையுற்ற சைவம் தழைத்தோங்கியதை நாம் அறிவோம்ஆதலின் அதுபற்றி எதுவும் கூறத் தேவையில்லை.

வேதங்களும் சிவாகமங்களும் சைவத் திருமுறைகளும் சாத்திரங்களும் சித்தாந்த நெறிக்குப் பிரமாணமாக விருப்பவை. தமிழர் சமயமாகிற சித்தாந்த நெறிக்கு வடமொழியில் ஆக்கப்பட்ட வேதாகமங்கள் எங்ஙனம் பிரமாணமாகவியலும் என்ற மயக்கம் சிலருக்கு ஏற்படக்கூடும். இதுபற்றி ஒரு சிறிது சிந்தித்தல் நலம். மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகவே வடநாட்டில் வசித்து வந்து ஆரிய மக்களும் திராவிடமக்களும் மொழி, இனம், நாகரிகம் என்று பல்லாற்ருனும் கலந்துவிட்டனர். சொல், கருத்து, செயல்முறை ஆகிய பலதுறைகளிலும் இரு குழுவினரும் கொண்டும் கொடுத்தும் வாழ்ந்துவந்தனர். எனினும் வேதாகமங்களும் பிற சாத்திரங்களும் பெருமளவில் வடமொழியிலே இருப்பது கொண்டு இவையெல்லாம் ஆரியருக்கே உரியவை என்று மயங்குவோர் உண்டு. வடமொழியிலே எண்ணிறந்த சாத்திர நூல்கள் இருப்பதற்குக் காரணம் நாட்டின் அவ்வப்பகுதியிலுள்ள அறிஞர் பெருமக்கள் நாடு முழுவதிலும் தங்கள் கொள்கைகள் பரவவேண்டும் என்றெண்ணி வடமொழியிலே நூல்களை எழுதினர், பரப்பினர், போற்றினர். ஆகவேதான் நாடெங்கிலும் அத்வைதத்தைப் பரப்ப எண்ணிய

தென்னாட்டவரான ஆதிசங்கரர் வடமொழியில் சூத்திர பாஷ்யம் முதலான நூல்களை எழுதி நாடெங்கிலும் அதைப் பரப்பமுடிந்தது. தமிழகத்திலே பக்திநெறியைப் பரப்பக் கருதிய நமது சமயகுரவர்கள் தமிழிலே பாக்கள் யாத்தனர். வடமொழியில் ஆகமங்கள் எழுதப்பட்ட காரணத்தினால்தான் சைவம் நேபாளத்திலும் காஷ்மீரத்திலும் குஜராத்திலும் தமிழகத்திலும் இன்னும் பலவிடங்களிலும் பரவியிருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே நம் சமயத்திற்கேற்ற கருத்துக்கள் எந்த மொழியில் இருந்தபோதிலும் அனைத்துமே நமக்கு உரியவை. 'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு'. வடமொழியை ஆரியரோடு மட்டும் பிணைப்பதோ தமிழ்மொழியை திராவிட இனத்தவரோடு மட்டும் பிணைப்பதோ பொருந்தாது. மொழி ஒரு கருவி. அதை யாவரும் பயன்படுத்தலாம். ஆகவேதான் வேதம் பொது ஆகமம் சிறப்பு என்ற மரபு நம் முன்னோரால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. 'வேதமொ டாகமம் மெய்யாம் இறைவன் நூல்' என்றார் திருமூலர்.

நம் சமயத்தின் முதல்வன் சிவபெருமான். அவன் முன்னைப்பழம் பொருட்கு முன்னைப்பழம் பொருளாகவும், பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனாகவும் உள்ளவன். ஆகவே அவனைச் சார்ந்த சமயமும் ஆதியும் அந்தமுமில்லா அரும்பெருஞ் சோதியாக விளங்கி பாச வினை நீக்கி நம்மை எல்லாம் அவன் திருவடியைச் சேர்ப்பிக்கும் பெருமையது என்பது குறிப்பு. அந்த சிவமே அன்பு என்று கண்டார் திருமூலர். இதையே 'அயரா அன்பு' என்று சிவஞானபோதம் கூறும். 'இறைவனைப்பற்றி இடையறாது முறுகி வளரும் அன்பின் முதிர்ச்சியிலே அச்சிவம் விளங்கும்' என்று பொருள் கூறுவர்

அறிஞர். மாணிக்கவாசகர் போன்றவர்கள் இறைவ னிடத்து இடையறாது அன்பைப் பெருக்கி வந்தார்கள். சிவமாம் தன்மையைப் பெற்றார்கள். இதனை 'ஆடகச் சீர்மணிக் குன்றே! இடையறா அன்புனக்கு என் ஊட கத்தே நின்றுருகத் தந்தருள் எம் உடையானே' என்ற மாணிக்கவாசகத்தில் காணலாம். இறைவன் எல்லா உயிர்களிடத்தும் தங்கியிருப்பவன் ஆதலால் அவை அனைத்திடத்தும் அன்பு செலுத்துவதே மேலான அறம். இவ்வன்பு செயலில் வெளிப்படவேண்டும். 'நடமாடக் கோயில் நம்பர்க் கொன்றீயில் படமாடக் கோயில் பகவற்கதாமே' என்றார் திருமூலரும். இது இன்று சமூக சேவை என்று சொல்லப்படுவதற்கும் மேலான ஒரு நிலை. நம் தலைவனான சிவபெருமானே ஒரு பெரும் தொண்டன் என்பதை நாவுக்கரசர் 'தொண்டலால் துணையுமில்லை' என்ற சொற்களில் சுட்டியிருக்கிறார். நஞ்சுண்டு அமைந்த நாகரிகக் கடவுள் நம் பெருமான். பேராற்றல் படைத்த அவன் உலகம் உய்யும் பொருட்டுச் செயற்கரும் அச் செயலைச் செய்தான். நாமும் அத்தகைய சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சராய் அவர் காட்டிச் சென்ற செந்நெறியில் நம் சிற்றறிவிற்கும் சிறு ஆற்றலுக்கும் ஏற்ற வகையில் பணிசெய்து கிடப்போமாக.

இன்றைய உலகில் பலநாட்டவரும் ஒன்று சேர வேண்டும் என்று எண்ணுகின்ற காலத்தில் நமது சமயத் திலே நாம் கொண்டுள்ள பற்றும் விரிந்த ஒன்றாக இருத் தல் வேண்டும். விரிவிலா அறிவினர் வேறொரு சமயம் செய்து எரிவினாற் சொன்னாரேனும் அன்பால் அனைவரை யும் பிணைத்தல் வேண்டும். தென்னாடுடைய சிவன் எந் நாட்டவர்க்கும் இறைவன் அன்றோ? சமய நெறிகளும் சடங்குகளும் நம்மை நாம் செம்மைப் படுத்திக் கொள் வதற்கு வகுக்கப்பட்டனவேயன்றி இந்நெறிகளும் சடங்

குகளும் நம்மை ஒரு குறுகிய கட்டுக்குள் அகப்படுத்திக் கொள்வதற்கல்ல. அவரவர் நிலைக்கும் பக்குவத்திற்கும் ஏற்ப இவற்றை அமைத்துக் கொள்ளுதல் இன்றியமையாதது. இதற்கு அடிப்படையாக சாத்திர தோத்திர நூல்களை நன்காராய்ந்து தெளிவு பெறுதல் வேண்டும். கற்றதனால் ஆயபயன் என்கொல்? என்ற வினாவிற்கு இன்று கல்வித்திட்டம் வகுக்கின்றவர்கள் மறுமொழி கூற இயலாத நிலையில் இருக்கின்றார்கள். இந்நிலை மாற இளைஞர்களும் பெரும்பொறுப்பு ஏற்கவேண்டும்.

தில்லையிலே குழுமியிருக்கின்ற நாம் இங்கு வீற்றிருக்கும் பெருமானை நினைவு கூர்தல் பொருந்தும். சைவத்திருவுருவங்களிலே கலையழகும்,கற்பனைத் திறனும், தத்துவக் குறிப்பும் ஒருங்கே அமையப்பெற்ற ஒன்றுதான்நடராஜப் பெருமான் திருவுருவம். சித்தமும் செல்லாச் சேட்சியன் திருச்சிற்றம்பலத்தில் குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும் கொண்டிலங்கும் கூத்தப் பெருமானாகக் காட்சிதருகின்றார். 'என்று வந்தாய்?' என்னும் திருக்குறிப்பை எம்பெருமானிடத்தில் காண்கிறோம். மாணிக்கவாசகர் போன்ற பக்தர்களையும் ஆனந்த குமாரசாமி போன்ற கலாரசிகர்களையும் ஸர். ராதாகிருஷ்ணன் போன்ற தத்துவ மேதைகளையும் இத்திருவுருவம் ஈர்த்திருக்கிறதென்றால் அதன் சிறப்பை நாம் அதிகம் கூறத் தேவையில்லை. 'பூதங்களைந்தாகிப் புலனாகிப் பொருளாகிப் பேதங்களனைத்துமாய் பேதமிலாப் பெருமையனை கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை' அன்று மாணிக்கவாசகர் கண்டார்.

வேதங்க ளாடமிகு ஆகம மாடக்
கீதங்க ளாடக் கிளர்அண்டம் எழாடப்
பூதங்கள் ஆடப் புவனம்முழு தாட
நாதங்கொண் டாடினான் ஞானானந்தக் கூத்தே'

என்றவாறு ஓய்வற்ற ஒரு பேரியக்கத்தை, அருளாற்றலை அதில் நாம் காண்கிறோம். அவ்வியக்கத்தினூடே ஓர் அமைதியையும் காண்கின்றோம். இப்பேரண்டத்தில் அணுக்கள் போன்ற நாமும் இயங்கிக்கொண்டே இருக்க வேண்டும் என்று அறிவுறுத்துவதுபோல் அமைந்திருக்கிறது அத்திருவுருவம்.

பதஞ்சலியும் வியாக்கிரபாதரும், சமயாசாரியர்களும் உமாபதி சிவமும், திருநீலகண்டரும், திருநாளைப் போவாரும், ஞானப்பிரகாசரும், ஆறுமுக நாவலரும் இன்னும் பல சைவப் பெரியார்களும் இத்தலத்திற்குப் பெருமைதேடித் தந்திருக்கிறார்கள்.

'அனைத்துலகும் தொழும் தில்லையின்' எல்லையிலே எல்லை காக்கும் தில்லைக் காளியைக் காண்கின்றோம். சிவனும் சக்தியும் அறிவும் ஆற்றலும் அரண் செய்கின்றன இத்தலத்தை.

கீழெல்லையில் அடியேனை எட்டாண்டுகள் இருத்தி ஆளாக்கிய அண்ணமலை நகர் அன்று வேட்கள நன்னகர் என்று ஞானசம்பந்தரால் போற்றப்பட்டுள்ளது. அந்நகருக்கு அப்பர் பெருமான் சென்றிருக்கிறார். அவர் பாடலுடன் எனது சிற்றுரையை முடிக்கிறேன்.

நன்றும் நாடொறும் நம்வினை போயறும்
என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்
சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை
துன்று பொற்சடை யானைத் தொழுமினே.

முருகன் அச்சகம், சென்னை-14

திருக்குடந்தை திரு. K. S. P. K. குஞ்சிதபாதம் செட்டியார் அவர்கள் மூலம் தங்கள் அருமைத் தந்தையார் சிவ பூசைச் செல்வர் திரு. கொ. சொ. பொ. கோடிலிங்கம் செட்டியார் அவர்கள் முதலாண்டு நிறைவுவிழா 24-1-66-ல் நிகழ்ந்தது குறித்து சமாஜத்திற்கு வந்த சமயக்காணிக்கை ரூ. 5—.

இந்த அன்பர் அவர்களைப் போன்றே தங்கள் குடும்பச் சிறப்புகளில் ஒரு அங்கமாக நம் சமாஜத்தையும் கருதி கிறித்தவர்களைப் போன்று நம் தலைசிறந்த சமயத் தாபனமாகிய சமாஜத்துக்கும் அவ்வப்போது ஆவன உதவவேண்டுகின்றோம். (துணைச் செயலாளர்.)

திருவான்மியூர் ஸ்ரீமருந்தீசர் ஆலயத்தில் திருநீலகண்ட நாயனார் உற்சவமூர்த்தப் பிரதிஷ்டை 2—2—66 அன்று காலை நிகழ்ந்தது. இச்சிவபுண்ணியச் செயலை நம் சமாஜப் பெரியார் அருள்திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை யவர்கள் ஏற்று நடத்தினார்கள், அன்று மாலை சொற்பொழிவுகள், திருவீதி உலா முதலியன நிகழ்ந்தன.

புரசைத் திருநெறிக் கழக 60 ஆம் திங்கள் வழிபாட்டு விழா 20—2—66 அன்று பெருநகர் சிவன் கோவிலிலும் திருமாகறல் சிவாலயத்திலும் சிறப்புற நிகழ்ந்தது.

வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சோம சுந்தர நாயகரவர்கள் 65 ஆம் ஆண்டு குருபூசை விழாவும் வேதாகமோத்த சைவசிந்தாந்த சபையின் 107ஆம் ஆண்டு விழாவும் 24—2—66, 26—2—66 நாட்களில் சூளை காசி விசுவநாதர், சிதம்பரேசர் திருக்கோயில்களில் முறையே நிகழ்ந்தன.

பம்பாய் ஜோதிமன்றத்தின் சார்பில் முருகன் கோயில் நிதிக்காக அருள் மொழி அரசு திருமுருக. கிருபானந்தவாரியார் அவர்கள் ஸ்ரீ கந்தபுராண விரிவுரை 20—3—66 முதல் 4-4-66 முடிய நிகழ்த்துவார்கள். பங்குனி உத்திர விழாவும் சிறப்பாக நிகழும். இத்தெய்வப் பணிக்குப் பொருளுதவி அளிக்க விரும்புவோர் "காரியதரிசி, ஜோதி மன்றம், 8. பாஸ்கர் பவன், மாதுங்கா—பம்பாய் 19" என்ற முகவரிக்கு அனுப்பிவைக்கவும்.

இராமாபுரம் ஆசிரியர் திரு. R. கிருஷ்ணசாமி நாயகர் அவர்களின் 25ஆம் ஆண்டு நினைவு நாள் சிறப்பு விழா ஒரு சமய மாநாடு போன்றே 6—3—1966, 7—3—1966 ஆகிய இரு நாட்களிலும் சிறப்புற நிகழ்ந்தது. நம் சமாஜப் பெரியார்கள் பலரும் பங்கு பெற்று சொற்பொழிவுகள் முதலியன ஆற்றினர்.

PRESS AND REGISTRATION OF BOOKS ACT

**REGISTRATION OF NEWSPAPERS (CENTRAL) RULES, 1956 FORM IV (RULE 8)**

**Statement about ownership and other particulars about "SIDDHANTHAM" Tamil Monthly**

| | | |
|---|---|---|
| 1. | Place of publication | ... 12, East Mada Street, Mylapore Madras-4. |
| 2. | Periodicity of its Publication | ... Monthly |
| 3. | Printer's Name | ... V. Sambandan |
| | Nationality | ... Indian |
| | Address | ... Senguntha Mithran Press, 33, Armenian St., Madras-1. |
| 4. | Publisher's Name | ... S. Satchidanandam Pillai, B.A., L.T., |
| | Nationality | ... Indian |
| | Address | ... 175-A Lloyds Road, Madras-14 |
| 5. | Editor's Name | ... M. Arunachalam, M.A., |
| | Nationality | ... Indian |
| | Address | ... Gandi Vidyalayam, Thiruchitrambalam (Via) Kuttalam, Tanjore Dt., |
| 6. | Names and addresses of individuals who own the newspaper and partners or share-holders holding more than one percent of the total capital. | "Saiva Siddhantha Maha Samajam" (Registered) with no share holders or partners but only members paying subscriptions. [ "Siddhantham " is not a newspaper ] |

I, S. Satchidanandam Pillai hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

(Sd.) S. SATCHIDANANDAM PILLAI,
Signature of Publisher.

Dated 8—3—1966

**Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan, Edited by M. Arunachalam, M. A., and Published by S. Satchidanandam Pillai, B. A., L. T., for the Saiva Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.**